# परमपूज्य श्रीचन्द्रशेखरेन्द्रसरस्वती श्रीचरण सहस्रनामस्तोत्रम्

## नामावलिः



अपारकरुणासिन्धुं ज्ञानदं शान्तरूपिणम्।
श्रीचन्द्रशेखरगुरुं प्रणमामि मुदाऽन्वहम्॥

# ஸ்ரீ மஹா பெரியவாளும்
# அவர்களது எண்ணற்ற நாமங்களும்

ஈசனைப்போன்று குரு தானே வெளிப்படுகிறார். தன்னைத்தானே அறிமுகப்படுத்திக் கொள்கிறார். பல வகையில் தன்னை உணரச் செய்கிறார். ஸ்தூலமாக, ஸ்தூலத்திற்கு அப்பாற்பட்டதாக, ஸூக்ஷ்மமாக, ஸூக்ஷ்மத்திற்கும் அப்பாற்பட்டதாக குறிப்பீட்டிற்கு உட்படாததாக, உணரத்தக்கதாக, உணர்விற்கும் அப்பாற்பட்டதாக உள்ள இறைவனின் பெருமை போல் குருவின் பெருமையும் பல சமயங்களில் உணரப் பெறுகிறது. உற்றுநோக்க, அந்நிலைகளும் எண்ணற்றதாகி விடுகின்றன. நிலைகளில் பெற்ற அனுபவம் ஈசனைப் பலபெயர்களைக் கொண்டு அழைக்கச் செய்கிறது. கிருஷ்ணன், கோவிந்தன், கிரிதரன், கோபன், கோபிகாஜீவனன் என்று எண்ணற்ற சொற்கள் ஒரே வஸுதேவரின் மகனைக் குறிப்பிடும். ஒரே கிருஷ்ணனைக் குறிப்பிடுகிற இந்நாமங்களை ஒவ்வொன்றையும் தனி தனியே மனநாக்கால் சுவைக்க, பல வரலாறுகளும் அவற்றின் தனித் தன்மையும் உணரப் பெறும்.

மஹாபெரியவாள் ஒருவரே! அவருக்கு அவரது தந்தை இட்ட பெயர் ஸ்வாமிநாதன். குரு இட்ட பெயர் சந்திரசேகரர். பீடம் அளித்த பெயர். ஸ்ரீ சந்திரசேகரேந்திர ஸரஸ்வதீ. மக்களிட்ட பெயர். பெரியவாள், மஹா பெரியவாள், சங்கராசாரியாள், ஸ்வாமிகள், பரமாசார்யாள், தெய்வம் என்று ஆயிரக் கணக்கானவை. ஒவ்வொன்றின் பின்னரும் ஒரு வரலாற்றுப் பிணைப்பு உண்டு. ஒவ்வொன்றும் அவரை மட்டும் குறிக்கும் என்ற எண்ண அழுத்தமுண்டு. 50-60 ஆண்டுகள் அவருடன் தொடர்பு கொண்டவர் பலர். அவர்களில் பலர், வரலாறு அவர்களுக்கிட்ட பெயர்களை நினைவில் கொண்டு அதைப் பலர் அறிய உரத்த குரலில் கூறுவதைக் காணலாம். அவைகளிலிருந்து தொகுக்கப் பெற்றவை இந்நாமங்கள்.

---

புத்தகம் கிடைக்குமிடம் :- ஸ்ரீ காஞ்சி காமகோடிபீடம்
ஸ்ரீ மடம் ஸம்ஸ்தானம், 1.சாலைத் தெரு, காஞ்சீபுரம் 631502

# ஸ்ரீ மஹா பெரியவாளே நினைவிற் கொள்ள

ஸ்ரீ மஹாபெரியவாளின் ஆயிரம் நாமங்களைத் தொகுக்க முனைந்ததும் சுமார் ஐம்பதாண்டுகளாகத் தூர நின்றும் அருகில் நெருங்கியும் பெற்ற காட்சிகள் ஒன்றன்பின் ஒன்ருக வரிசையாக, சில சமயம் ஆற்றுப் பெருவெள்ளமாக முண்டியடித்து நினைவில் வந்தன. வரலாற்றுக் கண்ணோட்டத்தில் வேறுபலர் கண்ட காட்சிகளின் எழுத்து வடிவங்களும் கலந்த போது பல்லாயிரக் கணக்கில் நாமங்கள் வடிவெடுத்தன. என் அனுபவத்திற்கேற்றவாறு அவை ஆயிரத்தினுள் வடிவமைக்கப் பெற்றன. வெளிப்பார்வையில் ஒரே பொருளுள்ள நாமமே மறுபடி மறுபடி இடம் பெற்ருலும் ஸந்தர்ப்பத்திற்கேற்றவாறு அது வேறு பொருள் தந்தது. நாமத்தால் அவர்களின் வரலாறும் வரலாற்றின் உணர்வால் நாமமும் வியப்புக்குரிய நிலையைக் கொணர்ந்தன.

மஹா பெரியவாளுடன் சம்பந்தப்பட்ட இடத்தையும் பேச்சையும் ஏனையவையும். உணரும்போதும் மஹா பெரியவாள் நேரில் காணப் பெறுகிருர். இனி இந்த நாமங்களைப் பொருளை உணர்ந்து கூறும்போது பூஜ்ய ஸ்ரீ பெரியவாள் இருவர்களைக் காணும்போதும் அவர்களது நடைமுறைகளை உற்றுநோக்கும்போதும் மஹா-பெரியவாளை உள்ளத்தில் காண முடியலாம். நாத்யாஸ்தீதி ப்ப்ராந்திபீதி மக்நஸ்வாந்தே அஸ்மீதி ப்ரதர்சக: (1005) என்ற நாமம் விளக்குவதுபோல் இனி அத்தகைய மஹானைக் காண்போமா என்று ஏங்குபவர் முன் இதோ நானிருக்கிறேன் என்று அதிஷ்டானத்திலிருந்தும் இரு பெரியவாள் மூலமும் இந்த நாமங்கள் மூலமும் காட்டிக் கொண்டிருப்பார்.

S.V. ராதாகிருஷ்ண சாஸ்திரீ,
தொகுப்பாளன்.

சிமிழி வெங்கடராம சாஸ்திரீ டிரஸ்ட்
22. வீரேச்வரம் அப்ரோச் ரோடு.
ஸ்ரீரங்கம் 620006.

श्रीगुरुभ्यो नमः

## श्रीगुरुवन्दनम्

गुरुर्ब्रह्मा गुरुर्विष्णुर्गुरुर्देवो महेश्वरः ।
गुरुः साक्षात्परं ब्रह्म तस्मै श्रीगुरवे नमः ॥ १

गुरवे सर्वलोकानां भिषजे भवरोगिणाम् ।
निधये सर्वविद्यानां दक्षिणामूर्तये नमः ॥ २

अज्ञानतिमिरान्धस्य ज्ञानाञ्जनशलाकया ।
चक्षुरुन्मीलितं येन तस्मै श्रीगुरवे नमः ॥ ३

श्रीगुरो दक्षिणामूर्ते भक्तानुग्रहदायक ।
अनुज्ञां देहि भगवन् गुरुनामचयाय मे ॥ ४

वन्दे गुरुपदद्वन्द्वं अवाङ्मनसगोचरम् ।
रक्तशुक्लप्रभामिश्रमतर्क्यं त्रैपुरं महः ॥ ५

*ஸ்ரீ குருப்ப்யோ நம:*

## ஸ்ரீ குரு வணக்கம்

*குரு பிரும்மா, குரு விஷ்ணு, குரு தேவரான மஹேச்வரன். குரு பரம்பொருளே. அந்த குருவிற்கு வணக்கம். (1) உலகமனைத்திற்கும் குருவும், தோன்றுவதும் மறைவதுமான பவ நோயுற்றவருக்கு வைத்தியரும், வித்யைகள் அனைத்தின் வைப்பிடமுமான தக்ஷிணாமூர்த்திக்கு வணக்கம். (2) அறியாமை எனும் பார்வை மறைப்பு நோயால் குருடனுக்கு ஜ்ஞானம் என்ற மையிடுகிற சலாகையால் கண்களைத் திறந்துவிட்ட ஸ்ரீ குருவிற்கு வணக்கம். (3) தக்ஷிணாமூர்த்தியான குருவே! பக்தனுக்கு அருள் புரிபவரே! பகவானே! குருவின் நாமங்களைத்திரட்ட அனுமதி தருவீர். (4) வாக்கிற்கும் மனத்திற்கும் எட்டாததும் சிகப்பு வெண்மை ஒளிக்கலவை கொண்டதும் இன்னதென ஊகிக்க முடியாத திரிபுரையின் ஒளியுமான அந்த இரு குரு சரணங்களையும் வணங்குகிறேன்.(5)*

सदाशिवसमारंभां शङ्कराचार्यमध्यमाम् ।
अस्मदाचार्यपर्यन्तां वन्दे गुरुपरंपराम् ।। ६

श्रुतिस्मृतिपुराणानामालयं करुणालयम् ।
नमामि भगवत्पादशङ्करं लोकशङ्करम् ।। ७

अपारकरुणामूर्तिं ज्ञानदं शान्तरूपिणम् ।
श्रीचन्द्रशेखरगुरुं प्रणमामि मुदाऽन्वहम् ।। ८

परित्यज्य मौनं वटाधःस्थितिं च व्रजन्भारतस्य प्रदेशात्प्रदेशम् ।
मधुस्यन्दिवाचा जनान्धर्ममार्गे नयन् श्रीजयेन्द्रो गुरुर्भाति चित्ते ।। ९

नमामः शङ्करान्वाख्यविजयेन्द्रसरस्वतीम् ।
श्रीगुरुं शिष्टमार्गानुनेतारं सन्मतिप्रदम् ।। १०

*ஸதாசிவனிடம் தொடங்கியதும் சங்கராசார்யரை நடுவில் கொண்டதும் நம் ஆசாரியர் வரை வந்ததுமான குருபரம்பரையை வணங்குகிறேன்.(6) வேதம் ஸ்மிருதி மற்றும் புராணங்களின் இருப்பிடமும் கருணையின் இருப்பிடமும் உலகிற்கு நன்மை புரிபவருமான சங்கர பகவத்பாதரை வணங்குகிறேன். (7) எல்லையற்ற கருணையின் வடிவினரும் அறிவை வழங்குபவரும் சாந்தவடிவினருமான ஸ்ரீ சந்திர சேகரகுருவை தினமும் மகிழ்ச்சியுடன் வணங்குகிறேன் (8) (தக்ஷிணாமூர்த்தியாக ஏற்ற) மௌனத்தையும் ஆலின்கீழ் இருப்பையும் கைவிட்டு பாரதத்தின் ஒரு பிரதேசத்திலிருந்து மறு பிரதேசத்திற்குச் சென்று சுற்றி சுற்றிச் வருபவரும் தேன் ஒழுகும் வாக்கால் மக்களைத் தர்ம வழியில் அழைத்துச் செல்பவருமான குரு, ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதீ உள்ளத்தில் துலங்குகிறார். (9) நல்லோர்கள் சென்ற வழியில் கூட இருந்து அழைத்துச் செல்பவரும் நல்லறிவு ஊட்டுபவருமான ஸ்ரீ சங்கர விஜயேந்திர ஸரஸ்வதீ ஸ்ரீ குருவை வணங்குவோம். (10)*

श्रीगुरुभ्यो नमः

श्रीकाञ्चीकामकोटिपीठाधीश्वरजगद्गुरु श्रीशङ्कराचार्य

# परमपूज्य श्रीचन्द्रशेखरेन्द्रसरस्वतीश्रीचरण सहस्रनामस्तोत्रम्

शुक्लांबरधरं विष्णुं शशिवर्णं चतुर्भुजम्।
प्रसन्नवदनं वन्दे सर्वविघ्नोपशान्तये।। १

पुस्तकजपवटहस्ते वरदाभयचिह्नचारु बाहुलते।
कर्पूरामलदेहे वागीश्वरि शोधयाशु मम चेतः ।। २

नारायणः पद्मभवो वसिष्ठः शक्तिश्च तत्पुत्रपराशरश्च।
व्यासः शुको गौडपदो यमीन्द्रो गोविन्दयोगीति गुरुक्रमोऽयम्।। ३

## ஸ்ரீ காஞ்சீகாமகோடிபீடாதீச்வர ஜகத்குரு ஸ்ரீ சங்கராசார்ய பரமபூஜ்ய ஸ்ரீசந்திரசேகரேந்திர ஸரஸ்வதீ ஸ்ரீ சரண ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம்

*வெண்ணிற ஆடை உடுத்தியவரும் சந்திரனின் வண்ணம் கொண்டவரும் நான்கு கைகளுள்ளவரும் தெளிந்த (மதம் பிடித்தயானை) முகமுடையவருமானவரை எல்லா இடையூறுகளும் அடங்க வணங்குகிறேன். (1) புத்தகமும் ஜப மாலையும் கைகளில் கொண்டவளே! வரம் தருவதையும் அபயமளிப்பதையும் குறிப்பிடுகிற அழகிய கைகள் உள்ளவளே! கர்பூரம் போன்ற அப்பழுக்கற்ற மேனியளே! வாக்கின் தேவியே! என் உள்ளத்தை விரைவில் தூய்மைப்படுத்துவாய். (2) நாராயணன், பிரும்மா, வஸிஷ்டர், சக்தி, அவரது புதல்வர் பராசரர், வியாஸர், சுகர், யோகிகளில் சிறந்த கௌடபாதர், கோவிந்த யோகி என இந்த குருபரம்பரை. (3)*

आद्यः श्रीशङ्कराचार्यो भगवत्पादसंज्ञकः ।
अवतीर्णः शंभुरिति प्रथितः कालटीपदे ।। ४

सुरेश्वरः पद्मपादो हस्तामलकतोटकौ ।
सर्वज्ञश्चेति तच्छिष्याः प्रथिता गुरुसन्निभाः ।। ५

शङ्करः कामकोट्याख्यं पीठं काञ्च्यां व्यराजयत् ।
प्रत्यस्थापयदद्वैतं पीठे सर्वज्ञके स्थितः ।। ६

आत्मानमनु सर्वज्ञं सुरेश्वरमते स्थितम् ।
गोप्तारं कामकोट्याख्यपीठस्य व्यदधाद्गुरुः ।। ७

तदाद्येन्द्रसरस्वत्याख्याऽविच्छिन्ना परंपरा ।
पाति नो गुरुवर्याणां शारदामठसुस्थिता ।। ८

अष्टषष्टितमाचार्यः शंकरश्चन्द्रशेखरः ।
विराजते ब्रह्मभूतः स्वं बृन्दावनमास्थितः ।। ९

*பகவத்பாதர் எனப்படும் ஆதிசங்கராசார்யர். காலடியில் தோன்றிய சிவ பெருமானே இவர் எனப்புகழப் பெற்றவர். (4) ஸுரேச்வரர், பத்மபாதர், ஹஸ்தாமலகர், தோடகர், ஸர்வஜ்ஞர் என்ற இந்த ஐவரும் குருவிற் கேற்ற அவரது சிஷ்யர்கள் எனப் புகழ்பெற்றவர். (5) சங்கரர் காஞ்சியில் காமகோடி எனும் பீடத்தை அலங்கரித்தார். ஸர்வஜ்ஞ பீடத்தில் அமர்ந்து அத்வைதத்தை நிலைநிறுத்திஞர். (6) தன்னைத் தொடர்ந்து ஸுரேச்வரரின் வழிகாட்டலின் நின்ற ஸர்வஜ்ஞரை காமகோடி பீடத்தின் காப்பாளராக குரு சங்கரர் அமரச் செய்தார். (7) அவரை முதல்வராகக் கொண்ட இந்திர ஸரஸ்வதி என்று (நடுவில் மறைவுருத) தொடர்ந்து வருகிற சிறந்த குரு பரம்பரை சாரதா மடத்தில் அமர்ந்து நம்மைக் காக்கிறது. (8) 68வது சங்கராசார்யராக ஸ்ரீ சந்திரசேகரர் தன் பிருந்தாவனத்தில் பரபிரும்ம நிலையில் விளங்குகிறுர். (9)*

तस्य नामान्यनन्तानि तदनुग्रहभाजनैः ।
गीयन्तेऽनुदिनं भक्त्या तदनुग्रहकाम्यया ।। १०

नाम्नां सहस्रं गौणेभ्यस्तन्नामभ्यः प्रकीर्तये ।
चित्तशुद्ध्यै तत्प्रसादलब्ध्यै लोकशिवाय च ।। ११

तदार्हन्त्यै प्रपद्ये तान् कामकोटिगुरूत्तमान् ।
प्रपन्नवत्सलान् लोकहिताचरणतत्परान् ।। १२

ध्यानम्

अपारकरुणासिन्धुं ज्ञानदं शान्तरूपिणम् ।
श्रीचन्द्रशेखरगुरुं ध्यायामि तमहर्निशम् ।। १३

श्रीशङ्करार्यमपरं श्रीशिवाशिवरूपिणम् ।
पूज्यश्रीकामकोट्याख्यपीठगं तं दयानिधिम् ।। १४

*அவரது நாமங்கள் எண்ணற்றவை. அவரது அருளுக்குரியவர்களால் தினந்தோறும் அவரது அருளைப் பெறவே பக்தியுடன் பாடப்பெறுபவை. (10) குணச்சிறப்பை விளக்குகிற அந்த நாமங்களிலிருந்து ஆயிரம் நாமங்களைச் சித்தம் தெளிய அவரது அருள் பெற உலகம் நலம் பெறப் பாடுகிறேன். (11) அதற்கான தகுதி பெற உலகின் நலத்தைப் புரிவதில் ஆர்வம் மிக்கவர்களும் அண்டியவர்களிடம் அன்புள்ளம் கொண்டவர்களுமான காமகோடி குருவரர்களைச் சரணடைகிறேன். (12)*

தியானம்:- *எல்லையற்ற கருணைக்கடலும் பேரறிவு வழங்குபவரும் சாந்த உருவினருமான ஸ்ரீ சந்திரசேகரகுருவை இரவும் பகலும் தியானிக்கிறேன். (13) மற்றொரு சங்கராசார்யர், ஸ்ரீசிவையும் சிவபெருமானுமாக உருக்கொண்டவர், பெருவழிபாட்டிற்குரிய ஸ்ரீ காமகோடி பீடத்திலமர்ந்தவர். தயையின் காப்பிடம். (அவரைத் தியானிக்கிறேன்.) (14)*

ओं

अपारकरुणासिन्धुर्ज्ञानदः शान्तमानसः ।
श्रीचन्द्रशेखरगुरुः शुचिर्दान्तस्तपोरतः ।। १
ऋजुः क्षमापरोऽतर्क्यः स्थिरधीरचलोऽमलः ।
अष्टषष्टितमाचार्यशङ्करो देशिकाग्रणीः ।। २
काञ्चीराजत्कामकोटिपीठालंकृतिविश्रुतः ।
कामकोटीपीठकृत्यनिर्वाहोद्युक्तपूर्वजः ।। ३
जयाब्दवैशाखजातः प्रतिपत्तिथिसंभवः ।
आर्याभिख्यातगोविन्दयज्वदौहित्रवंशजः ।। ४
कुलदेवतयाऽऽख्यात स्वामिशैलेशनामवान् ।
नागेश्वरार्यदौहित्रो मीनाक्षीतनुजाभवः ।। ५
सुब्रह्मण्यात्मजः सूरिरनुराधाभवः सुहृत् ।
महालक्ष्मीगर्भधृतः ऋग्वेदी हरितान्वयः ।। ६

நாமங்கள்:- *எல்லையற்ற கருணைக்கடல், பேரறிவு வழங்குபவர், சாந்தமான உள்ளம் கொண்டவர், ஸ்ரீசந்திர சேகரர் என்ற குரு, தூயவர், புலனடக்கமுள்ளவர், தவத்தில் ஆழ்ந்தவர். (1) நேர்மையுள்ளவர், பொறுமை மிக்கவர், இன்னார் இத்தகையவர் என ஊகிக்க இயலாதவர், நிலைத்த எண்ணமுள்ளவர். அசையாதவர், அழுக்கற்றவர், 68வது சங்கராசார்யர், வழிகாட்டிகளில் முன் நிற்பவர். (2) காஞ்சியில் விளங்குகிற காம கோடிபீடத்தை அலங்கரிப்பதால் நாடறிந்தவர். காமகோடி பீடத்துப் பணிகளை நிறைவுறச் செய்தவர்களை தன் முன்னோர்களாகக் கொண்டவர். (3) ஜய ஆண்டின் வைகாசியில் தோன்றியவர். பிரதமைதிதியில் தோன்றியவர். அய்யன் எனப்புகழப்பெற்ற கோவிந்த தீக்ஷதரின் பெண் வழி வந்தவர். (4) குல தெய்வமான ஸ்வாமிமலை ஈசனின் (ஸ்வாமிநாதன் என்ற) பெயர் கொண்டவர். நாகேசுவரரின் பெண்ணின் புதல்வர், மீனாக்ஷியின் புதல்வியின் புதல்வர். (5) ஸுப்ரஹ்மண்யரின் புதல்வர், பேரறிஞர். அனுஷ நக்ஷத்திரத்தில் தோன்றியவர், நல்லிதயம் படைத்தவர். மஹாலக்ஷ்மியின் கருவில் தோன்றியவர், ருக்வேதி, ஹரித கோத்திரத்தினர். (6)*

होसलस्मार्तकुलजः कर्णाटीमातृभाषणः ।
गणपत्यनुजः सांबललितादिपुरोभवः ॥ ७
पराभवाब्दमाघात्ततुर्याश्रम उदारधीः ।
सर्वज्ञभगवत्पादाचार्यरूपो महायशाः ॥ ८
महादेवेन्द्रयतिराडनुगो बालसंयमी ।
रक्तशुक्लप्रभामिश्रश्रीगुरुध्याननिर्वृतः ॥ ९
कलवैग्राम आरूढपीठो गुरुपदस्थितः ।
प्लवङ्गचैत्रे पट्टाभिषिक्तो देशिकसत्तमः ॥ १०
गृहीतविद्यः प्रमुखसूरिभ्यस्तत्त्ववित्तमः ।
महेन्द्रमङ्गलगुरुकुलवासी द्विजावृतः ॥ ११
दक्षस्तीर्थात्तशास्त्रार्थस्तीर्थीकृतनिजाश्रितः ।
सर्वतः सारसङ्ग्राही संभाषारसिकाग्रणीः ॥ १२

*ஹொய்ஸலஸ்மார்த்தகுலத்தில் பிறந்தவர். கன்னடத் தாய்மொழியர். கணபதியின் தம்பி. ஸாம்பமூர்த்தி லலிதா முதலானவருக்கு முன் தோன்றியவர். (7) பராபவ ஆண்டு மாசியில் துறவறம் ஏற்றவர். பெருமனம் படைத்தவர். ஸர்வஜ்ஞரான ஆசார்ய பகவத்பாதரின் வடிவில் உள்ளவர். பெரும்புகழுள்ளவர். (8) மஹாதேவேந்திரர் என்ற துறவரசரைப்பின் தொடர்ந்தவர். துறவிச்சிறுவர். சிவப்புடன் வெண்ணிற ஒளி கூடிய ஸ்ரீ குருவின் தியானத்தால் அமைதியுள்ளவர். (9) கலவைக் கிராமத்தில் பீடமேறியவர். குரு நிலையில் அமர்ந்தவர். ப்லவங்கசித்திரையில் பீடாதிபதியாகப் பட்டமேற்றவர். வழிகாட்டியான நல்லவர். (10) பேரறிஞர்களில் சிறந்தவர்களிடமிருந்து கல்விபெற்றவர். தத்துவம் உணர்ந்தவர்களில் மிகச் சிறந்தவர். மஹேந்திரமங்கலத்தில் குருகுலத்தில் வசித்தவர். அந்தணர்களால் சூழப்பெற்றவர். (11) ஆற்றலால் தேர்ந்தவர். கல்வியில் தேர்ந்தவர்களிடமிருந்து சாஸ்திரப் பொருளுணர்ந்தவர், தன்னை அண்டியவரைத் தேறச் செய்பவர். எல்லாவற்றிலிருந்தும் சாரமானதை ஏற்பவர். கூடிப்பேசி ரஸிப்பதில் சிறந்தவர். (12)*

**सारज्ञाताऽविसंवादी ज्ञातज्ञेयो विशालधीः ।**
**परचित्तविदेकान्तचिन्तकोऽमर्षवर्जितः ॥ १३**

**संस्कृतद्राविडान्ध्रादिबहुभाषाविशारदः ।**
**स्वयं शिष्टः शिष्टजनवृतो धर्म्ये पथि स्थितः ॥ १४**

**शुद्धस्त्रिषवणस्नायी काषायांबरवेष्टितः ।**
**आद्यशङ्करयोगीन्द्रसमयानुगतौ रतः ॥ १५**

**बाहुदण्डलसद्दण्डः कराग्रगकमण्डलुः ।**
**फालभागलसद्भूति पुण्ड्रोऽतिविमलाननः ॥ १६**

**स्वदण्डपूजनरतो दण्डदृष्टेश्वरः सुधीः ।**
**भूतिप्रलिप्तावयवः पुण्यतीर्थकृताप्लवः ॥ १७**

**अग्निर्वायुर्जलं सर्वं भस्मेति मनने रतः ।**
**सदा त्रियंबकमनुजापी शिवतनुः शिवः ॥ १८**

*ஸாரமறிந்தவர். மறுத்துப்பேசாதவர். உணரத்தக்கதை உணர்ந்தவர், பரந்த அறிவுள்ளவர். பிறர் உள்ளத்தை உணர்ந்தவர், தனிமையில் சிந்திப்பவர். பொருமையின்மை யற்றவர். (13) ஸம்ஸ்கிருதம் தமிழ், தெலுங்கு முதலிய பல மொழிகளில் தேர்ந்தவர். தானே கட்டுப்படுத்திக் கொண்டவர், கட்டுப்பாடுள்ளவர்கள் சூழநிற்பவர், அறவழியில் நிலைத்தவர். (14) தூய்மைப்படுத்திக் கொண்டவர், மூன்று வேளைகளிலும் நீராடுபவர், காஷாய ஆடை உடுத்தியவர், ஆதிசங்கரரின் வழியைப் பின்பற்றுவதில் ஈடுபட்டவர். (15) தண்டம் துலங்குகிற தண்டம் போன்ற நீண்ட கையுள்ளவர். கையின் நுனியில் கமண்டலு உள்ளவர். நெற்றியில் விபூதி அணிந்தவர். மிகத் தூய முகமுள்ளவர். (16) தன் தண்டத்தை வழிபடுபவர், தண்டத்தில் ஈசனைக் கண்டவர், நல்லறிவாளி. உடல் முழுவதும் விபூதி பூசியவர். புனித நீர் நிலையில் நீராடியவர். (17) அக்னியும் நீரும் வாயுவும் அனைத்தும் பஸ்மமே என்று கூறுகிற மந்திரத்தை மனனம் செய்வதில் ஈடுபட்டவர். எப்போதும் திரியம்பக மந்திரம் ஜபிப்பவர். சிவவடிவினர், சிவன். (18)*

धृतरुद्राक्षमकुटो जनदृष्टशिवाकृतिः ।
रुद्राक्षमालाभरणः कम्रो मन्दगतिर्व्रती ।। १९

धर्ममार्गाग्रगामी चानुगमार्गप्रदर्शकः ।
वाणीविहारिजिह्वाग्रो लोकसंग्रहणे रतः ।। २०

सुन्दरीचन्द्रमौलीशपदाब्जमधुपान्तरः ।
श्रीमहादेवयतिराडीप्सिताचार संयतः ।। २१

श्रीचन्द्रशेखरयतिदृष्टतुर्याश्रमस्थितिः ।
श्रीमेरुमध्यबिन्दुस्थ सुन्दरीध्यानतत्परः ।। २२

कैलासानीतयोगाख्यशिवलिङ्गकृतार्हणः ।
पूजामण्डपवाहादिसमलंकृतितत्परः ।। २३

गणेशादित्यगोविन्द शिवाशङ्करपूजकः ।
अद्वैतभावनापेतभेदधीः (१००) सगुणेक्षणः ।। २४

*ருத்ராக்ஷத்தாலான கிரீடமணிந்தவர். சிவவடிவினராக மக்களால் காணப்பெற்றவர். ருத்ராக்ஷ மாலையை அணியாகக் கொண்டவர். அழகால் ஈர்ப்பவர். மெதுநடையினர். விரதமிருப்பவர். (19) அறவழியில் முன் செல்பவர், தன்னைத் தொடர்பவருக்கு வழிகாட்டி. ஸரஸ்வதி விளையாடுகிற நுனி நாக்குள்ளவர். மக்களைத் தன்னுடன் இணைத்துக் கொள்வதில் ஆர்வமுள்ளவர். (20) திரிபுரஸுந்தரீ - சந்த்ரமௌளீசுவரத் திருவடித் தாமரைகளில் வண்டான உள்ளத்தினர். குரு ஸ்ரீ மகாதேவயதிவரர் விருப்பப்பட்ட வழிமுறைகளில் கட்டுண்டவர். (21) பரமகுரு ஸ்ரீ சந்த்ரசேகரயதிவரர் விரும்பியபடி துறவேற்றவர். ஸ்ரீ மேருவின் நடுபிந்துவில் உள்ள திரிபுரஸுந்தரியின் தியானத்தில் ஆழ்ந்தவர். (22) கைலாஸத்திலிருந்து கொணரப் பெற்ற யோகலிங்கம் என்ற சிவலிங்கத்தை வழிபடுபவர். பூஜை மண்டபம், ஈசனின் வாகனம் முதலியவற்றை அழகுபடுத்துவதில் ஆர்வமிக்கவர். (23) கணேசர், ஸூர்யன், விஷ்ணு, சிவை, மற்றும் சிவனை வழிபடுபவர். அத்வைதத்தில் ஊறியுள்ளதால் (தெய்வங்களிடையே) வேற்றுமையுணர்வற்றவர். (100) ஸகுண வடிவைக் காண்பவர். (24)*

**सर्वं ब्रह्मेति कृतधीः सर्वत्रब्रह्मभावनः ।**
**पञ्चायतनसुज्ञेयदेवपूजनतत्परः ॥ २५**
**श्रीरुद्रपाठनिरतोऽतिरुद्रादिप्रवर्तकः ।**
**शिवार्पितमनःकायः सर्वत्र श्रीशिवेक्षणः ॥ २६**
**क्षेत्रयात्रापरो विश्वाकारब्रह्मविमर्शकः ।**
**क्षेत्रेशपूजकश्चिन्ताक्रियान्वयकृतौ क्षमः ॥ २७**
**सद्वृत्तजनताभाग्यं साधुतर्पणभाषणः ।**
**चिद्रसार्द्रः सत्तमानामतिरोधापितक्रमः ॥ २८**
**ऊहाद्यगम्यव्यापारोऽनलसः सफलोद्यमः ।**
**सुव्रतः सुखदाचारः सुकृती सुकृतार्हणः ॥ २९**

*அனைத்தும் பிரம்மமே என்ற முடிவிற்கு வந்தவர். எங்கும் பிரும்மத்தை உணர்பவர். ஐந்து தெய்வஸ்தானங்களில் (பஞ்சாயதனத்தில்) எளிதில் உணரத்தக்க தேவர் வழிபாட்டில் முனைந்தவர். (25) ஸ்ரீருத்ரத்தை எப்போதும் சொல்பவர். அதிருத்ரம் முதலிய சிறந்த வழிபாடுகளை நடத்தச் செய்பவர். சிவனிடம் உடலையும் உள்ளத்தையும் ஒப்பித்தவர். எங்கும் சிவனை (ஸ்ரீ சிவையை) காண்பவர். (26) க்ஷேத்திர யாத்திரையில் முனைபவர். பரம்பொருள் உலக வடிவிலிருப்பதாக ஆராய்பவர். க்ஷேத்திர தேவதைகளை வழிபடுபவர். எண்ணத்தைச் செயல் வடிவாக்கத் திறமையுள்ளவர். (27) நன்மக்களின் பாக்யமானவர். நல்லோருக்கு மன நிறைவு கிட்டும்படி பேசுபவர். பேரறிவைச்சுவைப்பதால் நெகிழ்ந்தவர். தன் செயற்பாட்டை நல்லோர்களிடம் மறைக்காதவர். (28) ஊகித்தறிய இயலாத செயல் முறை கொண்டவர். சோம்பலற்றவர். முயற்சியைப் பலனுள்ளதாக்குபவர். நல்விரதம் பூண்டவர். இனிய நடைமுறையுள்ளவர். நற்செயல் புரிபவர். பிறரை நன்கு மதிப்பவர். (29)*

कष्टावहव्रती कष्टाचिन्तकः सुकरोद्यमः ।
निर्व्यापारलवः स्वार्थे व्यापृतो जनताहिते ।। ३०
दुर्ज्ञेयवस्तुनिवहलघूकरणभाषणः ।
निर्लक्ष्यो लब्धलक्ष्यार्थो वाङ्मनोऽतीतचिन्तकः ।। ३१
विविधाप्तजनप्रार्थ्यदर्शनोऽगूढचर्यकः ।
कालदेशावधिकृतनियन्त्रणबहिर्भवः ।। ३२
निगमागमनिर्भाततत्त्वान्वेषी विचारवान् ।
अस्पष्टो दृष्टमात्रेण शान्तः सुग्रहविग्रहः ।। ३३
भूतभूतेन्द्रियमनोवशीकरणतत्परः ।
दुर्लभ्यवस्तुसुलभीकरणे मार्गदर्शकः ।। ३४

*கஷ்டம் தருகிற விரதத்தைக் கொள்பவர். கஷ்டத்தைப் பொருட்படுத்தாதவர். எளிதான முயற்சி கொண்டவர். தன் பொருட்டுப் பணி சிறிதுமில்லாதவர். மக்களின் நலத்தில் ஈடுபட்டவர். (30) அறிய வொண்ணுதவற்றை தன் விளக்கத்தால் எளிதாக்குபவர். தனக்கெனக் குறிக்கோளில்லாதவர். இலக்கை அடைந்தவர். வாக்கிற்கும் மனத்திற்கும் எட்டாததைப் பற்றிச் சிந்திப்பவர். (31) தன்னைக் காணப்பலதரப்பட்ட மக்களின் கோரிக்கையை ஏற்பவர். மறைவில் செயல்படாதவர். காலமும் தேசமும் வரையறைகளும் கட்டுப்படுத்த முடியாத இயல்புள்ளவர். (32) வேதமும் ஆகமங்களும் விளக்குகிற தத்துவத்தைத் தேடுபவர். ஆராய்தலுள்ளவர். பார்த்ததும் புரிந்து கொள்ள முடியாதவர். அமைதியுற்றவர். எளிதில் மனத்தில் பதிகிற உருவமுள்ளவர். (33) ஐம்பூதங்கள், அவற்றிற்கான இந்திரியங்கள் மற்றும் மனத்தைத் தன் வசமாக்குவதில் ஈடுபடுபவர். எளிதில் கிட்டாதனவற்றை எளிதில் அடைய வழிகாட்டுபவர். (34)*

उद्युक्तः पुरुषार्थार्थी सान्द्रानन्दावबोधकः ।
तन्वा वाचा धियाऽक्षुद्रः क्षुद्रचेतोविदूरगः ।। ३५
विश्वपीडापहानाय यतः स्थिरतरात्मधीः ।
रजस्तमोऽनाकुलितसत्ववृत्तिः प्रशान्तधीः ।। ३६
परानन्दामृतास्वादी निष्कंपः कुपरिस्थितौ ।
नित्यपूर्णपरब्रह्मलीनधीरकृतान्तरः ।। ३७
अव्यापृतोऽनेककृत्यव्यापृतो रागदूरगः ।
उद्यत्सूर्याभवक्त्रश्रीः भालराजित्रिरेखकः ।। ३८
प्रव्राट् प्रव्राड्गणोद्दीपः काषायांबरशायनः ।
कौपीनराजत्कटिको वस्त्रालंकृत्यनिर्भरः ।। ३९

*தளராமல் முயல்பவர். அறம் பொருள் இன்பம் முக்தி என்ற நாடத்தக்கப் பொருட்களில் நாட்டமுள்ளவர். நெகிழ்ந்து இறுகிய ஆனந்தத்தை உணர்பவர். உடலாலும் வாக்காலும் உள்ளத்தாலும் அற்பமாகாதவர். (மகான்). அற்பத்தை நாடுபவரை விட்டுத் தூர விலகி நிற்பவர். (35) உலகின் துயரைக் குறைக்க முனைபவர். நன்கு நிலைத்த ஆத்மானுபவம் உள்ளவர். ரஜோகுணமும் தமோ குணமும் குழப்பாத ஸத்வ குணப் போக்குள்ளவர். பேரமைதி கொண்ட உள்ளமுள்ளவர். (36) பேரானந்த அமுதத்தைச் சுவைத்துப் பருகுபவர். கெட்ட சூழ்நிலையில் தன் நிலை அசையாதவர், நித்தியமும் பூர்ணமுமான பரப்பிரும்மத்தில் உள்ளத்தால் லயித்தவர். வேறுபாடுகாணாதவர். (37) (தனக்கெனப்) பணிகளில் ஈடுபடாதவர். பற்பலப் பணிகளில் ஈடுபட்டவர். பற்றைத் தூரவிலக்கியவர். உதிக்கின்ற சூரியனை ஒத்த முக ஒளிகொண்டவர். நெற்றியில் மூன்று ரேகைகள் உள்ளவர். (38) துறந்து வெளியேறியவர். துறந்து வெளியேறுபவர்களுக்கான விளக்கொளி. காஷாய ஆடை மீது சயனிப்பவர். கௌபீனத்தால் அழகுற்ற இடுப்புள்ளவர். ஆடையணிவதில் முனைவற்றவர். (39)*

महितो वेदवचसा मोहितो वेदवाचनैः ।
कान्तः स्वाचरणैः कान्तिनिधानं मधुरेहितः ।। ४०
पूर्वभाषी मधुरवाक् निकटस्थो हितैषणः ।
विभुर्हृदा प्रभुःशक्त्या कुतुकी लोकसंग्रहे ।। ४१
प्रभविष्णुः प्रभविता निश्चेष्टश्चेष्टिताखिलः ।
नेत्रद्धयमतिप्रीतिदायकाचरणः कृती ।। ४२
अंबाध्यानामृतस्यन्दसन्दोहाप्लुतमानसः ।
धराधरसुतादिव्यकथामृतकृतादरः ।। ४३
सौन्दर्यलहरीपाने पायनेऽश्रुपरिप्लुतः ।
पुरः सन्निहितानम्रजनाभीष्टदवाक्सुधः ।। ४४

வேதவாக்கால் பாராட்டப் பெறுபவர். வேதவாக்குகளைக் கேட்டு தன் நிலை மறந்தவர். தன் நடைமுறைகளால் ஈர்ப்பவர். ஒளியழகின் வைப்பிடம். இனிய கருத்துள்ளவர் *(40)* முன்னதாகப் பேசுபவர். இனிது பேசுபவர். அருகிலுள்ளவர். இதத்தை விரும்பிச் செய்பவர். உள்ளத்தால் வானளவு விரிந்தவர். ஆற்றலால் செயல்வீரர். மக்களைக் கவர்வதில் ஆர்வமிக்கவர். *(41)* மேலாண்மைத் திறன் படைத்தவர். மேலாளுனர். செயலற்றவர். அனைவரையும் செயல்படச் செய்பவர். இரு கண்களுக்கும் அறிவிற்கும் ஆர்வம் தரும் நடைமுறையுள்ளவர். செய்ய வேண்டியதைச் செய்தவர். *(42)* அம்பாளின் தியான அமுதப் பொழிவில் மூழ்கிய உள்ளம் கொண்டவர். மலைமகளின் தெய்விகக் கதையமுதத்தில் ஆர்வமிக்கவர். *(43)* ஸௌந்தர்யலஹரீ என்ற பெருவெள்ளத்தைப் பருகுவதிலும் பருகச் செய்வதிலும் கண்ணீரால் கனிந்தவர். தன்னை அணுகி வணங்கி நிற்கிற மக்களின் விருப்பம் நிறைவுற ஆசி வழங்குபவர். *(44)*

परमानन्दसान्द्रात्मभाषणाल्लोकनन्दकः ।
परभक्तिप्लुतो देवीचन्द्रमौलिप्रपूजकः ।। ४५

कारुण्यात्माऽऽश्रितहिताचरणोऽमेयहृद्गतः ।
वागीशानो मधुरवाक् स्वात्मदश्चाविशेषदृक् ।। ४६

दयागुरुर्लोकहितप्रवणीकृतसज्जनः ।
अनभ्यर्थ्यर्थिनिवहविश्राणितधनादिकः (२०१) ।। ४७

लोकाहितावहजननेतृसौमत्यदायकः ।
निग्रहानुग्रहचणोऽसङ्गो भगवदाश्रितः ।। ४८

भक्तेष्टदः पारिजातसमः स्वात्मन ईशिता ।
अर्थिव्रजार्तिहरणनियोजितधनिव्रजः ।। ४९

*பேரானந்தத்தில் திளைக்கிற தன் பேச்சால் மக்களை மகிழ்விப்பவர். பக்திப் பெருநிலையில் திளைப்பவர். தேவியையும் சந்திரமௌளீச்வரரையும் நன்கு பூஜிப்பவர். (45) கருணையே வடிவானவர். அண்டியவருக்கு இதம் தருபவர். அளவீட்டிற்குட்படாத உள்ளப்பாங்குள்ளவர். வாக்கின் ஈசன். இனிய வாக்குள்ளவர். தன்னையே தருபவர். பாரபட்சம் பாராதவர் (46) பரிவால் கனத்தவர். மக்களின் நன்மையில் நல்லோரை முனைவுடன் ஈடுபடச் செய்பவர். எதனையும் பிறரிடம் வேண்டாதவர். (200) தன்னிடம் வேண்டி நிற்பவருக்குத் தனம் முதலியவற்றை வழங்குபவர். (47) மக்களுக்கு இதமல்லாததைச் செய்கிற மக்கள் தலைவர்களுக்கு நன்மதி தருபவர். அடக்கியாளவும் அருள் புரியவும் திறமையுள்ளவர். ஒட்டுதலற்றவர். பகவானை ஒட்டியவர். (48) பக்தன் விரும்புவதை வழங்குபவர். பாரிஜாதம் (கற்பகமரம்) போன்றவர். தன்னைத்தானே மேலாள்பவர். ஏழைகளின் குறை நீங்கும்படி செல்வந்தர்களைத் தூண்டுபவர். (49)*

स्फीतभाग्यप्रदानोत्कचरणः स्वात्मनिष्ठितः ।
कीर्त्यो गुणगणाधारः सौन्दर्यलहरीरतः ॥ ५०

स्वाङ्गभास्वत्तपःश्रीको विश्वतेजा विभावितः ।
महिताचार्यचरणोऽखिलविद्वेद्यदर्शनः ॥ ५१

ईशितेशितसन्मर्त्यः शारदामठसुस्थितः ।
विद्यावान्विमलोद्योगो विज्ञो निःस्पृहचेष्टितः ॥ ५२

असक्तः सुखसंवेत्ताऽदीनः शोकविवर्जितः ।
विवासी विजने गानरतो वीणाविनोदवन् ॥ ५३

शक्रवाटीद्रुमततिलघूकारिशिवास्मृतिः ।
शिवयोर्ध्यानयोगेन शिवीकृतजगत्त्रयः ॥ ५४

*செழிப்புமிக்க பாக்யத்தைத் தருவதில் முனைந்த திருவடிகள் கொண்டவர். தன் ஆத்மாவில் நிலைபெற்றவர். பாராட்டத் தக்கவர். நற்குணக்குவியலின் ஆதாரம். ஸௌந்தரியலஹரீயில் ஆழ்ந்தவர். (50) தன்மேனிமுழுவதும் ஒளிர்கிற சீர்மிக்க தவமுள்ளவர். பேரொளி கொண்டவர். தன்னை மறந்தவர். தன் ஆசாரியரின் திருவடிகளைப் பெருமைப்படுத்துபவர். எல்லாமறிந்தவர். அறிவால் உணரவேண்டியதைக் காண்பவர். (51) ஆள்பவர், நன்மக்களை ஆள்பவர். சாரதா மடத்தில் இனிதமர்ந்தவர். கல்வி நிறைந்தவர். தூயமுயற்சி கொண்டவர். பேரறிவாளர். பற்றற்றுப் பணிபுரிபவர். (52) ஒட்டாதவர். இன்பத்தை நன்கு கண்டுணர்ந்தவர். தன்னிரக்கமற்றவர். சோகமற்றவர். தனக்கெனத் தங்குமிடமில்லாதவர். தனிமையில் கானத்தில் ஈடுபடுபவர். வீணையால் மனத்தை லேசாக்கிக் கொண்டவர். (53) அம்பாளின் நினைவால் கற்பக மரத்தோட்டத்தையே மதிக்காதவர். சிவனையும் சிவையையும் தியானிப்பதால் மூவுலகையும் சிவமய(மங்களமா)க்குபவர். (54)*

**आत्माराम आत्मदृष्टिपावितस्वजनो महान्।**
**शंकृत्यधिकृतैश्वर्यः शङ्करार्पितचिन्तनः ॥ ५५**

**विगीतो निःस्पृहैः सेव्यः सङ्गवार्ताविनाकृतः।**
**प्रेमार्द्रहासो मधुरवचाः क्षिप्रप्रसादनः ॥ ५६**

**दृश्यः सुनासः सुग्रीवो विभूत्यंकित फालकः।**
**कण्ठोज्ज्वलत्सुरुद्राक्षमालयोन्नतकन्धरः ॥ ५७**

**रुद्राक्षभूषितश्रोत्रो रुद्राक्षावलिशेखरः।**
**करलंबितरुद्राक्षजपमालः सुदर्शनः ॥ ५८**

**तुलसीबिल्वमालाधृक्शिराः प्रणतवत्सलः।**
**नारायणेतिव्याहारदत्ताशीर्वचनोऽनघः ॥ ५९**

*ஆத்ம உணர்வில் களிப்பவர். தன்னவர் என்ற எண்ணத்தால் தன்னைச் சார்ந்தவர்களைத் தூய்மைப்படுத்துபவர். பெரியவர். தன் ஐச்வர்யத்தை (ஆளுமையை) மக்கள் நலனுக்குப் பயன்படுத்துபவர். சிவனிடம் (ஆசார்ய சங்கரிடம்) தன் எண்ணங்களை அர்ப்பித்தவர். (55) பற்றற்றவரால் பாராட்டப்பெறுபவர். பணிவிடை புரியத் தக்கவர். ஒட்டுதல் என்ற சொல்லுக்கு இடமளிக்காதவர். அன்பால் கனிந்து சிரிப்பவர். இனிது பேசுபவர். விரைவுடன் அருள்புரிபவர். (56) காணத்தக்கவர், அழகிய மூக்குள்ளவர், அழகிய கழுத்துள்ளவர், விபூதி அடையாளங்கள் கொண்ட நெற்றியுள்ளவர், கழுத்தில் அழகுற அணிந்த ருத்ராக்ஷ மாலையால் மேடிட்ட கழுத்துள்ளவர். (57) ருத்ராக்ஷக் காதணி அணிந்தவர். ருத்ராக்ஷவரிசையைத் தலையில் சூடியவர். கையில் ருத்ராக்ஷத்தாலான ஜபமாலையுள்ளவர். அழகிய தோற்றமுள்ளவர். (58) துளஸி மாலையும் பில்வமாலையும் தலையில் அணிந்தவர். வணங்கியவரிடன் அன்புள்ளவர். நாராயண! எனக்கூறி ஆசி வழங்குபவர். குற்றமற்றவர். (59)*

नारायणेति व्याहार स्मृतगोविन्ददत्तधीः ।
भगवद्रूपकलनाव्यापृतक्षण ईडिता ॥ ६० 

आत्मसंपद्रतः संपद्यश्रद्धः स्वाश्रिताश्रयः ।
अच्युतस्मृतिलीनात्माऽच्युतोऽच्युतनिजाश्रितः ॥ ६१

चिरन्तनोक्तिमहितवेदरक्षापरायणः ।
आश्चर्यदर्शी कुतुकी विश्वगाश्चर्यदर्शने ॥ ६२

महीयसाऽपि महितः महनीयो महामनाः ।
दर्पणालोकितजगद्बोधितात्मस्वरूपदृक् ॥ ६३

लघ्वायाससुनिर्वर्त्यसत्कर्मसु नियोजकः ।
क्लिष्टतर्कारतो नीतिमार्गज्ञो नीतिबोधकः ॥ ६४

நாராயண என்று சொன்ன உடனே கோவிந்தனிடம் உள்ளம் பதிந்தவர். பகவானை உருவகப்படுத்துவதில் ஆர்வம் கொண்டவர். துதிப்பவர். (60) ஆத்மாவின் நிறைவில் ஆர்வமிக்கவர். செல்வச் செழிப்பில் கருத்தில்லாதவர். தன்னை அண்டியவரைத் தாங்குபவர். அச்யுதனை நினைப்பதில் லயித்தவர். நழுவாதவர். தன்னை அண்டியவரை நழுவவிடாதவர். (61) மிகப் மிகப்பழைய வாக்கென நன்கு மதிக்கப்பெற்ற வேதத்தைக் காப்பதில் முனைந்தவர். வியப்பிற்குரிய பரம்பொருளைக் காண்பவர். உலகம் முழுவதுமளாவிநிற்கிற ஆச்சரியப் பொருளான பரம்பொருளைக் காண்பதில் குன்றாத ஆர்வமுள்ளவர். (62) பெருமை மிக்கவராலும் பெரிதும் மதிக்கப் பெறுபவர். பெரிதும் மதிக்கத் தக்கவர். பெருமனம் படைத்தவர். கண்ணாடியில் (பிரதிபிம்பமாகக்) கண்ட உலகத்தைக் கொண்டு ஆத்ம ஸ்வரூபத்தை உணர்பவர். (63) எளிய முயற்சியால் நிறைவேறத் தக்க நற்பணிகளில் ஈடுபடுத்துபவர். வீணே சிரமம் தருகிற குதர்க்கத்தில் ஈடுபடாதவர். நீதிமுறையறிந்தவர். நீதியைப் போதிப்பவர். (64)

**ऐहिकश्रेयसो वक्ता चामुष्मिकहितावहः ।**
**मृदुः मृदुतरस्वान्तो बह्वर्थललितस्मितः ।। ६५**
**ललितान्यस्तसर्वस्वः सदयो दयिताश्रितः ।**
**महामहिमराष्ट्रेशसचिवाद्यभिवन्दितः ।। ६६**
**काशीनेपालराष्ट्रेशकृतपादाभिवन्दनः ।**
**धर्म्यमार्गगसन्नेतृन्यस्तधर्माभिरक्षणः ।। ६७**
**सौन्दर्यलहरीमुख्यस्तुतितत्त्वविदग्रणीः ।**
**शिवाकारः शिवानन्दलहरीमग्नमानसः ।। ६८**
**भगवत्पादरचितस्तोत्रपारायणोत्सुकः ।**
**आद्याचार्याखिलग्रन्थसारवेत्ता प्रगल्भवाक् ।। ६९**
**क्रोधदूरः क्रोधयन्ता यतो(३००) दान्तनिजान्तरः ।**
**स्वच्छन्दवृत्तिरच्छन्दो धर्मच्छन्दानुवर्तनः ।। ७०**

*இம்மையில் நலன் தருவதைக் கூறுபவர். மறுமையில் இதமானதைக் காட்டுபவர். மென்மைமிக்கவர். மிக மென்மையுள்ள உள்ளம் படைத்தவர் பல பொருட்களை உணர்த்துகிற புன்சிரிப்புள்ளவர். (65) லலிதையிடம் எல்லாவற்றையும் ஒப்படைத்தவர். பரிவுள்ளவர். அண்டியவரைத் தன் பரிவிற்கு உட்படுத்துபவர். பேராண்மை பெற்ற ராஷ்டிரபதி மந்திரி முதலானோரால் வணங்கப்பெற்றவர். (66) காசி - நேபாள அரசர்களால் திருவடிகளில் வணங்கப் பெற்றவர். அறவழியில் செல்கிற நல்ல தலைவர்களிடம் அறவழிக் காப்புப்பணியை ஒப்படைத்தவர். (67) ஸௌந்தர்ய லஹரி முதலிய துதிகளின் உட்கருத்தை அறிந்தவர்களில் முன் நிற்பவர். சிவ வடிவினர். சிவானந்த லஹரியில் ஆழ்ந்த உள்ளம் கொண்டவர். (68) பகவத் பாதர் இயற்றிய துதிகளை முறைப்படி பாடுவதில் ஆர்வமுள்ளவர். ஆதி ஆசார்யர் இயற்றிய நூல்கள் அனைத்தின் உட்கருத்தை உணர்ந்தவர். திறமைமிக்க பேச்சாளர். (69) கோபத்திடமிருந்து தூர விலகியவர். கோபத்தை அடக்குபவர். பெருமுயற்சியுள்ளவர். (300) தன் உள்ளத்தை அடக்கியவர். தன் போக்கில் நடப்பவர். தனக்கெனத் தனிப்போக்கில்லாதவர். தர்மத்தின் போக்கைப்பின் தொடர்பவர். (70)*

तच्छब्दवाच्यचिन्ताकस्तदर्थात्मनियोजकः ।
तद्वशस्तत्पदज्ञेयसगुणाज्ञावशंवदः ॥ ७१

सगुणब्रह्मदत्तेक्षः सगुणाभ्यर्हणे रतः ।
सगुणेऽर्पितसर्वस्वः सगुणान्निर्गुणेक्षकः ॥ ७२

भक्तप्रियो भक्तिवेद्यः भक्तिवश्यो भवार्चकः ।
भक्तसौभाग्यघटको भक्तेष्टाचरणप्रियः ॥ ७३

मन्त्रजापी मन्त्रसिद्धो मन्त्रार्थमनने रतः ।
भावनागम्यललितामहिमावेक्षणे रतः ॥ ७४

भवारण्यकुठारात्मानन्दलब्धिसुनिर्वृतः ।
महायोगेश्वरस्तन्त्रमन्त्रयोगविदर्हितः ॥ ७५

தத் என்ற சொல்லின் பொருளைச் சிந்திப்பவர். தத் என்ற பரம் பொருளிடம் தன்னை ஈடுபடத் தூண்டுபவர். தத் என்பதன் வசத்தில் உள்ளவர். தத் என்ற சொல்லின் பொருளாக உணரத்தக்க ஸகுணத்தின் ஆணைக்கு வசப்பட்டவர். (71) ஸகுணமான பரம்பொருளிடம் தன் பார்வையைச் செலுத்தியவர். ஸகுண வழிப்பாட்டில் ஆர்வம் கொண்டவர். ஸகுண தெய்வத்திடம் தனதனைத்தையும் அர்ப்பணம் செய்தவர். ஸகுணநிலையிலிருந்து நிர்குண நிலையைக் காண்பவர். (72) பக்தனின் அன்பர். பக்தியால் உணரத்தக்கவர். பக்திக்கு வசமானவர். பவனை (சிவனை) வழிபடுபவர். பக்தனின் செழிப்பை அமைத்துத் தருபவர். பக்தன் விரும்பியவாறு நடப்பதை விரும்புபவர். (73) மந்திரம் ஜபிப்பவர். மந்திர ஸித்தி பெற்றவர். மந்திரத்தின் உட்பொருளை திரும்பத் திரும்ப நினைப்பதில் ஈடுபட்டவர். பாவனையால் உள்ளத்தில் பதிந்த லலிதையின் பெருமையைக் காண்பதில் ஈடுபட்டவர். (74) தோன்றி மறைகிற இயல்புள்ள ஸம்ஸாரக் காட்டைச் சிதைக்கிற கோடரியான ஆத்மானந்தத்தைப் பெற்றதால் அமைதியுற்றவர். பெருயோக முறையை ஆள்பவர். தந்திர - மந்திர யோகங்களை அறிந்தவர். பாராட்டப் பெற்றவர். (75)

परात्मभावनालीनो मन्त्रतन्त्राद्युपेक्षकः ।
निर्ममो निरहङ्कारो निष्कामो निष्परिग्रहः ।। ७६

अक्लेशतो धीकालुष्यहारी विमलधीप्रदः ।
प्रमोदभरितस्वान्तो निर्वृतात्मेशचिन्तकः ।। ७७

धन्यो धन्यस्मृतिर्धन्यतापादकवचःस्मृतिः ।
तपसाऽधिगतस्वेष्टोऽगदो गदनिवारणः ।। ७८

देवीपदाब्जस्मरणरसिको नामजापकः ।
आधिव्याधिहरो दीनजनविश्रान्तिदायकः ।। ७९

चिद्रूपसद्दर्शनाप्तानन्दः संमोदसंभृतः ।
गूढात्मगतिरव्यग्रः प्रौढयोगगतौ चणः ।। ८०

பரமாத்ம பாவனையில் லயித்தவர். மந்திரத்தையும் தந்திரத்தையும் (பக்தியைவிடப்) பெரிதாகப் பாராட்டாதவர். தனக்கெனக் கொள்ளாதவர். தான் எனக் கொள்ளாதவர். நாட்டமற்றவர். தனக்கென உரிமைப் பொருள் கொள்ளாதவர். (76) சிரமமின்றி அறிவுக்குழப்பத்தை நீக்குபவர். தூய அறிவு தருபவர். பேரானந்தத்தால் உள்ளம் நிறைந்தவர். அமைதியுற்ற மனமுள்ளவர். ஈசனையே நினைப்பவர். (77) செயல் நிறைவு பெற்றவர். (கொடுத்து வைத்தவர்) மனநிறைவுடன் நினைக்கத்தக்கவர். தன் பேச்சும் நினைவும் பிறரது செயல் - மனநிறைவை தரும்படி செய்பவர். தவத்தால் தன் விருப்பத்தை நிறைவுறச் செய்பவர். நோயற்றவர். நோய் நீக்குபவர். (78) தேவியின் திருவடித் தாமரையின் நினைவை ரசிப்பவர். நாமஜபம் செய்பவர். மன - உடல் நோய் அகற்றுபவர். நலிந்தவருக்கு ஓய்வும் அமைதியும் அளிப்பவர். (79) பேரறிவு வடிவான பேரிருக்கையைக் கண்டதால் பேரானந்தம் பெற்றவர். பெரு மகிழ்ச்சி நிறைந்தவர். பிறர் உணர இயலாத தன் போக்கு உள்ளவர். முனைவற்றவர். மாபெரும் யோக முறையில் தேர்ந்தவர். (80)

देवीनामस्मृतिप्राप्तनैरुजस्तापवर्जितः ।
धर्म्याचारे दृढमतिः ईशेज्याधूतकल्मषः ॥ ८१

ईशालोकोत्कनयनः ईशगाथारतश्रवाः ।
पराङ्मुखस्याभिमुखीकरणे चाटुवाक्ततिः ॥ ८२

आर्तप्रलापिजनतोत्साहकृत् दैन्यनाशकः ।
यमादिनिरतः शान्तिदान्तिभूमा समाधिमान् ॥ ८३

शुभदर्भासनासीनो मृगाजिनकृतासनः ।
तारमन्त्रजपे लीनः प्राणवायुनियामकः ॥ ८४

ईशे विश्वात्मभावाढ्यः विश्वे ईशात्मभावनः ।
तारत्र्यवयवध्याता तारनादोन्मुखश्रवाः ॥ ८५

धारणाच्यवनक्लिन्नः पुनः सिद्धात्मधारणः ।
धारणानिर्वृतो ध्यानलब्धात्मानन्द आत्मवान् ॥ ८६

*தேவியின் நாமஸ்மரணத்தால் நோயகன்றவர். தாபமற்றவர். அறவழி நடப்பதில் திட சித்தம் கொண்டவர். ஈசனின் வழிபாட்டால் பாபமகன்றவர். (81) ஈசனைக் காண ஆர்வமிக்கக் கண்கள் உள்ளவர். ஈசனின் கதையில் ஈடுபட்ட காதுகளுள்ளவர். தன்னிடம் பராமுகமாயிருப்பவனை தன்னை நோக்கித் திருப்பத் திறமை மிக்க சொல்வன்மை உள்ளவர். (82) நொந்து புலம்புகிற மக்களுக்கு ஆறுதல் தருபவர். நலிவை போக்குபவர். யமம் நியமம் முதலிய ஆத்மகுணங்களில் ஈடுபட்டவர். உலகளாவிய சாந்தியும் புலனடக்கமும் கொண்டவர். ஸமாதி நிலைபெற்றவர். (83) நல்ல தர்ப்பாஸனத்தில் அமர்ந்தவர். மான்தோலை ஆஸனமாகக் கொண்டவர். பிரணவ மந்திர ஜபத்தில் தன்னை மறந்தவர். பிராண வாயுவைக் கட்டுப்படுத்துபவர். (84) ஈசனை உலக வடிவில் காண்பவர். உலகை ஈசனாகக் காண்பவர். ஓங்காரத்தின் மூன்று பகுதிகளையும் தனித்துத் தியானிப்பவர். ஓங்கார நாதத்தை உற்றுக் கேட்பவர். (85) தாரணை நழுவும்போது வருந்துபவர். மறுபடி தாரணையில் நிலை நிற்பவர். தாரணையால் அமைதி காண்பவர். தியானத்தால் ஆத்மானந்தம் பெற்றவர். ஆத்ம சக்தி மிக்கவர். (86)*

अनावृतपदस्थायी ब्रह्मभावादविच्युतः ।
अक्लिष्टकारी सुकरध्यानमार्गप्रदर्शकः ।। ८७

स्निग्धः समो मधुरगीर्मधुरान्मधुरेक्षणः ।
अव्याजकरुणापूर्णहृदयः करुणेक्षणः ।। ८८

निस्तुलस्तुलनाहीनब्रह्मवस्तुनिविष्टधीः ।
दुष्टदूरो दुष्टजनपावनो दुष्टतापहः ।। ८९

आर्यधर्मकामकोटिमुखपत्रप्रवर्तकः ।
बिम्बग्रहकलाभिज्ञो गायको गीतसारवित् ।। ९०

ज्ञानसंबन्धवागीशमुखगीतान्तरार्थदृक् ।
मणिवाचकगोदेशसुप्रभातस्तुतेश्वरः ।। ९१

श्रीमद्रामायणकथाश्रवणे कुतुकी शमी (४००) ।
रामनामप्रभावज्ञो रामचारित्रविस्मितः ।। ९२

ஆவரணமற்ற நிலையில் நிலை நிற்பவர். ப்ரும்ம நிலையிலிருந்து நழுவாதவர். சிரமமின்றி செயல் புரிபவர். எளிதில் கைவரக்கூடிய தியான வழி காட்டுபவர். (87) நண்பர். ஸம பாவனையுள்ளவர். இனிய குரலுள்ளவர். இனிதிலும் இனியதைக் காண்பவர். எதிர்ப்பார்ப்பற்ற கருணை நிறைந்த உள்ளம் படைத்தவர், பரிவுடன் பார்ப்பவர். (88) ஈடற்றவர். ஈடிணையற்ற பிரும்மப் பொருளில் பதிந்த உள்ளம். கொண்டவர். துஷ்டனிடமிருந்து தூரவிலகியவர். துஷ்டரையும் தூயவராக்குபவர். துஷ்டத்தன்மையை அகற்றுபவர். (89) 'ஆர்யதர்மம்' 'காமகோடி' முதலிய பத்திரிகைகளை நடத்தியவர். படம் பிடிக்கிற கலையில் தேர்ந்தவர். கானம் செய்பவர். கானத்தின் ஸாரமறிந்தவர். (90) ஞானஸம்பந்தர் திருநாவுக்கரசர் முதலானோரின் பாசுரங்களின் உட்பொருள் கண்டவர். மாணிக்கவாசகர் ஆண்டாள் இவர்களின் இறைவனது திருப்பள்ளி எழுச்சிப் பாடல்களால் ஈசனைத்துதிக்கச் செய்தவர். (91) ஸ்ரீமத் ராமாயணக்கதை கேட்பதில் ஆர்வமிக்கவர். அமைதிகொண்டவர். (400) ராம நாமப் பெருமை உணர்ந்தவர். ராமனின் நடைமுறையில் வியப்புற்றவர். (92)

श्रीरामनामलेखोत्कजनतोत्साहवर्धनः ।
कोटिसंख्याक श्रीरामनामलेख प्रवर्तकः ।। ९३

शुकवागमृतास्वादी श्रीकृष्णध्यानलीनधीः ।
कृतार्थचित्तो धन्यात्मा धन्यवाक्कायमण्डलः ।। ९४

समाकृतिः सहृदयः समनाः सङ्गवर्जितः ।
समः स्वपरभेदाज्ञः क्षमया पृथिवीसमः ।। ९५

करुणास्यन्दिदृक्पातो गीतदेवाररञ्जितः ।
देवारश्रवणप्रीतिधाता देवारतत्त्ववित् ।। ९६

देवारगायकगणरक्षको मधुगायनः ।
विद्वन्महितदेवारगीतः परशिवाकृतिः ।। ९७

सुधामधुरभाष्यल्पाक्षरो भूर्यर्थवेदकः ।
अक्षितेजोधूतपापो गोब्राह्मणहिते रतः ।। ९८

*ஸ்ரீ ராமநாமம் எழுதுவதில் ஆர்வமிக்க மக்களின் உற்சாகத்தைப் பெருக்குபவர். கோடிக்கணக்கில் ராமநாமம் எழுதச் செய்தவர். (93) சுகரின் மொழியமுதம் பருகியவர். ஸ்ரீகிருஷ்ணனைத் தியானிப்பதில் உள்ளலயிப்பு கொண்டவர். உள்ளத்தை நற்பயன் பெறச் செய்தவர். உள்ள நிறைவு கொண்டவர். வாக்கும் உடலும் ஏனையதும் முழுப் பயனை அடையச் செய்தவர். (94) ஸமநோக்குள்ளவர். ஸம உள்ளம் கொண்டவர். மன ஒற்றுமை கண்டவர். பற்றற்றவர். ஸமநிலையிலிருப்பவர். தான்பிறர் என்ற வேற்றுமை காணாதவர். பொறுமையில் பூமிக்கு ஈடானவர். (95) கரிசனம் பொழிகிற பார்வையுள்ளவர். தேவாரப்பாட்டில் மகிழ்ந்தவர். தேவாரப்பாட்டைக் கேட்பதில் விருப்பமூட்டுபவர். தேவாரத்தின் உட்பொருளறிந்தவர். (96) தேவாரம்பாடுபவர் கூட்டத்தைப் பாதுகாப்பவர். இனிது தேவாரம் பாடுபவர். தேவாரப்பாட்டைப் பேரறிஞர்களும் பாராட்டும்படி செய்தவர். பரமசிவ வடிவினர். (97) அமுதம் போன்று இனிது பேசுபவர். சொற்செட்டுள்ளவர். நிறையப் பொருளை விளக்குபவர். கண்ணொளியால் பாபமகற்றுபவர். பசு மற்றும் அந்தணரின் இதத்தை நாடுபவர். (98)*

गोशालापालनव्यग्रो वृद्धानाथसुपोषकः ।
यतिमण्डलसंवीतो बालचित्तविनोदनः ॥ ९९

भक्तमानसराजीवमित्रो मैत्रीदयाव्रती ।
आंग्ल्यादिबहुभाषावित् नव्यविज्ञानसूक्ष्मवित् ॥ १००

स्वभाषयाऽन्यभाषाविद्गणसंभाषणोत्सुकः ।
नव्यविज्ञानविन्मुख्यैस्तत्त्वविद्याविचारकृत् ॥ १०१

संभाषाज्ञातविज्ञानतारतम्यगवेषकः ।
पादमूलनतानेकविपश्चिद्गणसंवृतः ॥ १०२

सद्गोष्ठीमहितः साधुहिताचारः सतां गतिः ।
भगवच्छङ्करगुरोरपराकृतिरुत्तमः ॥ १०३

*கோசாலைப் பாதுகாப்பில் முனைந்தவர். முதியவர் அநாதர்களை நன்கு போஷிப்பவர். துறவிக்குழுவால் சூழப்பெற்றவர். சிறுவர் மனத்தைக் களிக்கச் செய்பவர். (99) பக்தர் மனமாகிய தாமரையை மலரச் செய்கிற சூரியன். நட்பும் பரிவும் விரதமாகக் கொண்டவர். ஆங்கிலம் முதலிய பல மொழிகள் அறிந்தவர். நவீன விஞ்ஞானத்தின் நுட்பமறிந்தவர். (100) தன் மொழியைக் கொண்டே பிற மொழி வல்லுனர் கூட்டத்துடன் கூடிப்பேசுவதில் ஆர்வமுள்ளவர். நவீன விஞ்ஞானமறிந்தவரில் சிறந்தவர்களுடன் தத்துவக் கல்விமுறை பற்றி ஆராய்பவர். (101) கூடிப் பேசுவதால் விஞ்ஞானத்தின் சிறப்பையும் வேறுபாட்டையும் ஆராய்பவர். திருவடியில் பணிந்து நிற்கிற பேரறிஞர் கூட்டத்தால் சூழப்பெற்றவர். (102) நல்லோர் குழுவால் பெரிதும் மதிக்கப் பெற்றவர். நல்லோருக்கு இதமான நடைமுறை கொண்டவர். நல்லோர் சென்றடைகிற இடம். பகவான் சங்கராசாரியரின் மாற்று வடிவம். சிறந்தவர். (103)*

काषायवासा विध्वस्तकषायो देशिकोत्तमः ।
शिरोवेष्टितकाषायवासोऽच्छन्नमुखांबुजः ॥ १०४

विशालवक्षा निष्टप्तहेमाभतनुरूर्जितः ।
वेदाध्ययनशालाकृद्वेदाधीतिकृतादरः ॥ १०५

वेदरक्षासमितिकृद्वेदाध्यापकमण्डनः ।
त्रयीपदविभागज्ञवेदाध्यापकरक्षकः ॥ १०६

अनधीतिवशाल्लुप्तवेदशाखागवेषकः ।
विमानितद्विजगणसंमाननकृतादरः ॥ १०७

पदक्रमजटापाठे विद्यार्थ्युत्साहवर्धनः ।
जयाख्येन्द्रसरस्वत्या कृतपादाभिवन्दनः ॥ १०८

श्रीशङ्करविजयेन्द्रसरस्वत्यभिवन्दितः ।
श्रीजयेन्द्रगुरुप्रेरकेच्छाशक्तिः प्रभावनः ॥ १०९

*காஷாய ஆடை கொண்டவர். மன அழுக்கான கஷாயத்தை நீக்கியவர். வழிகாட்டிகளில் மிகச்சிறந்தவர். தலையில் மறைப்பாகச் சுற்றிய துவராடையால் மறையாத முகத்தாமரை கொண்டவர். (104) அகன்ற மார்புள்ளவர். பழுக்கக்காய்ச்சிய தங்கநிறம் கொண்ட மேனியர். நிலைத்து நிற்பவர். வேதம் கற்றுத் தரப்பாடசாலை நிறுவியவர். வேதம் கற்பிப்பதில் ஆர்வமிக்கவர். (105) வேதரக்ஷணஸமிதி (வேதப்பாதுகாப்புக்குழு) அமைத்தவர். வேதம் சொல்லித் தருபவரைப் பாராட்டுபவர். வேதத்தின் பதப்பிரிவறிந்த வேத ஆசிரியரைக் காப்பவர். (106) அத்தியயன முறையின்மையால் மறைந்த வேதக்கிளைகளைத் தேடிப்பெற்றவர். மதிக்கப்பெறாத அந்தணர் கூட்டத்திற்கு மதிப்பளித்து ஆதரவு தந்தவர். (107) பதபாடம், கிரம பாடம் ஜடாபாடம் முதலியவற்றில் வேதமாணவருக்கு உற்சாகமூட்டுபவர். ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதி அவர்களால் திருவடிகளில் வணங்கப் பெற்றவர். (108) ஸ்ரீ சங்கர விஜயேந்திர ஸரஸ்வதியால் வணங்கப்பெற்றவர். ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதியை நற்பணிகளில் தூண்டுகிற இச்சா சக்தியானவர். மேலாளுமை பெற்றவர். (109)*

**क्रियाशक्तिश्रीजयेन्द्र पूरितेच्छो विभावनः ।**
**गुरुप्रियाब्रह्मसूत्रवृत्तिकृच्छिष्यतोषितः ।। ११०**
**राजराजाख्यचोलस्य स्वर्णमौलिकृतार्हणः ।**
**गुरोर्हृद्गतसङ्कल्पक्रियान्वयकृदाश्रवः ।। १११**
**कामाक्षीवाहकस्वर्णरथकल्पननिर्भरः ।**
**कामाक्ष्यंबालयस्वर्णच्छादको हेमदीप्तिमान् ।। ११२**
**काश्यां श्रीकामकोटीशालयकर्ता विदांवरः ।**
**कुंभाभिषेचनादीप्तदेवालय उदारधीः ।। ११३**
**कालट्यां शङ्करगुरोः कीर्तिस्तंभकृतार्हणः ।**
**चिदम्बरेशकरुणाप्लावितः शैववाग्रतः ।। ११४**
**रत्नभूषितनृत्येशहस्तशीर्षपदांबुजः ।**
**श्रीचक्रात्मकताटङ्कनवीकरणमोदितः ।। ११५**

*க்ரியா சக்தியான ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதியால் விருப்பம் நிறைவுறப் பெற்றவர். விரிவாக்குபவர். குருப்ரியா என்ற ப்ரஹ்மஸூத்திரங்களுக்கான கருத்துரை எழுதிய சீடரான ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதியால் மகிழ்விக்கப் பெற்றவர். (110) ராஜராஜன் என்ற சோழ அரசரின் சிலைக்குத் தங்கக் கிரீடம் அணிவித்துப் பாராட்டியவர். குருவின் எண்ணத்தைச் செயல் வடிவில் கொணர்கிற சிஷ்யர்கள் கொண்டவர். (111) காமாக்ஷியைச் சுமந்து வலம் வருகிற தங்கத்தேர் அமைத்ததில் முனைந்தவர். காமாக்ஷி அம்மன் ஆலய கோபுரத்தைத் தங்கத் தகடுகளால் மறைத்தவர். தங்கம் போன்று ஒளிர்பவர். (112) காசியில் காமகோடீச்வரர் ஆலயம் அமைத்தவர். பேரறிஞர்களில் சிறந்தவர். கும்பாபிஷேகம் செய்வித்துத் தேவாலயங்களை ஒளிமிக்கதாக்கியவர். வள்ளல் உள்ளம் படைத்தவர். (113) காலடியில் ஆசார்ய சங்கரருக்கு கீர்த்திஸ்தம்பம் அமைத்து வழிபட்டவர். சிதம்பரத்து ஈசனின் கருணையில் மூழ்கியவர். சைவப்பாசுரங்களில் ஆர்வமிக்கவர். (114) நடராஜரின் திருக்கை, சிரம், இரண்டு திருவடித் தாமரைகளில் ரத்ன அணிகள் அணிவித்தவர். ஸ்ரீசக்ரவடிவில் அமைந்த தாடங்கத்தைப் புதுப்பித்து மகிழ்ந்தவர். (திருவானைக்காவில்) (115)*

श्रीकामाक्ष्याः सहस्राख्यामालालङ्करणक्षमः ।
पदयात्रालंघिताध्वा क्षेत्रतीर्थाटनः सदा ।। ११६

क्षेमदो जनतायोगक्षेमविद्भद्रकारकः ।
वर्णधर्मरहस्यज्ञो ब्रह्मचर्यव्रते स्थितः ।। ११७

भस्मीकृतैषणाभत्रिभूतिरेखाललाटकः ।
ऊरीकृतजगद्रक्षो दृक्कोणकरुणेक्षणः ।। ११८

सुधास्रुतिसमाभाषः कण्ठगस्फटिकावलिः ।
अंबिकाक्रीडसौधाभाभयहस्तः पुरानवः ।। ११९

षड्भावदूरस्तपसा दीप्ततेजा बुधार्हितः (५००) ।
अन्तर्मुखः सदा मौनी जिततृष्णो जितक्षुधः ।। १२०

*ஸ்ரீ காமாக்ஷியை 1000 திருநாமங்கள் பதித்த தங்கமாலையால் அழகுபடுத்தியவர். கால் நடையாக பெருவழி கடந்தவர். எப்போதும் க்ஷேத்திர - தீர்த்தயாத்திரை செய்பவர். (116) நலம் தருபவர். மக்களின் யோக - க்ஷேமம் அறிந்தவர். மங்களமான செயல் புரிபவர். வர்ணங்களின் கடமைகளின் ரஹஸ்யமறிந்தவர். பிரும்மசரிய விரதத்தில் நிலைத்தவர். (117) பரலோக ஆசை, பொருளாசை, புத்திரப்பேறு ஆசை என்ற மூன்று ஆசைகளையும் பஸ்மமாக்கி மூன்று விபூதி ரேகையாக்கி நெற்றியில் அணிந்தவர். உலகப் பாதுகாப்பில் உறுதி பூண்டவர். கடைக்கண்களில் கருணைப் பார்வை கொண்டவர். (118) அமுதப் பெருக்கு போன்ற பேச்சாளர். கழுத்தில் ஸ்படிகமாலை பூண்டவர். அம்பாளின் விளையாட்டரங்கான அபயம் காட்டுகிற கை கொண்டவர். முதியவராயினும் இளமையுள்ளவர். (119) பிறப்பு, தோற்றம், வளர்ச்சி, மாறுபாடு, தேய்வு, அழிவு என்ற ஆறுநிலைகளுக்கு அப்பாற்பட்டவர். தவத்தால் ஒளிர்கின்ற தேஜஸ் உள்ளவர். அறிஞர்களால் வழிபடப் பெற்றவர். (500) உள் நோக்குபவர். எப்போதும் மௌனமுள்ளவர். நீர்வேட்கையற்றவர். பசியற்றவர். (120)*

गीर्वाणवाणीसंपोषलग्नः क्षामोदरः कृशः ।
बहिर्मुखो लोकहिते उपवासरतोऽक्लमः ।। १२१

धर्मपोषणसङ्कल्पो धर्मज्ञो धर्म्यपालनः ।
असङ्गविवृतज्ञानयोगो वेत्ता जितेन्द्रियः ।। १२२

शिष्योपदेशनिरतः कार्याकार्यप्रबोधकः ।
ज्ञानमुद्राञ्चितकरः कुक्कुटासनसुस्थितः ।। १२३

कान्तः पद्मासनासीनः क्वचिदुत्कटकस्थितः ।
पारिव्राज्याश्रमयशःकारको मन्त्रतन्त्रवित् ।। १२४

त्रयीमार्गोप्रदेष्टाऽर्च्यः सर्वतन्त्रस्वतन्त्रधीः ।
वेदान्तस्मृतितत्त्वज्ञो द्वैताद्वैतविचक्षणः ।। १२५

*ஸம்ஸ்கிருத மொழிபோஷிப்பில் ஈடுபட்டவர். வாடியவயிறு உள்ளவர். இளைத்தவர். உலகநலனுக்காக வெளிநோக்குள்ளவர். உபவாஸமிருப்பதில் ஆர்வமுள்ளவர். வாட்டமற்றவர். (121) தர்மத்தைப் போஷிக்கிற திட்டம் கொண்டவர். தர்மமறிந்தவர். தர்மத்தை ஒழுகுபவரைக் காப்பவர். ஒட்டுதலின்மையால் ஞானயோகத்தை விளக்கியவர். உள்ளுணர்வு கொண்டவர். புலன்களை வென்றவர். (122) சிஷ்யனுக்கு அருகிலிருந்து வழிகாட்டுபவர். செய்யத்தக்கதையும் தகாததையும் போதிப்பவர். ஜ்ஞானமுத்ரை (கட்டைவிரல் ஆள்காட்டி விரல் இணைப்பு) யால் அழகிய கைகள் உள்ளவர். குக்குடாஸனத்தில் நன்கு அமர்ந்திருப்பவர். (123) மனத்தைக் கவர்பவர். பத்மாஸனத்தில் அமர்ந்திருப்பவர். சிலவிடங்களில் உத்கடகாஸனத்தில் (குந்தி உட்கார்வது) இருப்பவர். துறவு நிலைக்குப் பெருமை தருபவர். மந்திரம் - தந்திரமறிந்தவர்; (124) வேதவழி காட்டுபவர். அர்ச்சனைக்குரியவர். எல்லா சாஸ்திரமுறைகளிலும் தனித்த அறிவாற்றல் உள்ளவர். உபநிஷத் - ஸ்மிருதி (கீதை முதலியவை) இவற்றின் உட்பொருளறிந்தவர். துவைதத்திலும் அத்வைதத்திலும் தேர்ந்தவர். (125)*

श्रुतिस्मृतिपुराणादिसारविद्विज्ञसंमतः ।
सारस्वतानुग्रहदो गुणत्रयविभागवित्॥ १२६

कलिघ्नः कल्युचितसत्सङ्गधाता विरक्तधीः ।
शैववैष्णवशाक्तादिलक्ष्यभेदप्रदर्शकः ॥ १२७

भगवन्नामरतिकृत् नामजपकमध्यगः ।
अमानुषचरित्राढ्यश्चातिमानुषवीर्यवान्॥ १२८

तत्तद्भाषागभजनस्तुतिगीतप्रकाशकः ।
चित्रकर्मरतश्चित्रदर्शनोत्सुकमानसः ॥ १२९

शिल्पचित्रकलाभिज्ञसंरक्षणविधौ रतः ।
शिल्पचित्रकलाबोधिविद्यालयविधायकः ॥ १३०

*வேதம் ஸ்மிருதி புராணம் முதலியவற்றின் உட்கருத்து உணர்ந்தவர். பேரறிவாளர்களால் ஒப்புக் கொள்ளப்பட்டவர். ஸரஸ்வதி அருள் பெற்ற வாக்கு வன்மையை அருள்பவர். ஸத்வம் ரஜஸ் தமஸ் என்ற முக்குணங்களின் பங்கீட்டை அறிந்தவர். (126) கலி (கலகம் செய்கிற மனப்பான்மை)யை அழித்தவர். கலிகாலத்திற்கேற்ற நல்லோரிணக்கத்தை அமைப்பவர். வைராக்யமுற்ற உள்ளத்தினர். சைவம் வைஷ்ணவம் சாக்தம் முதலியவற்றின் வேறுபட்ட உட்கருத்தை விளக்குபவர். (127) பகவந் நாமத்தில் ருசியை உண்டாக்குபவர். நாமஜபம் செய்பவரின் நடுவிலிருப்பவர். மனித இயல்பிற்கு மேம்பட்ட நடைமுறை கொண்டவர். மனித இயல்பிற்கு அப்பாற்பட்ட செயல்திறமை கொண்டவர். (128) அந்தந்த மொழியில் உள்ள பஜனைப்பாட்டு, துதிப்பாட்டு இவற்றை நூல் வடிவில் வெளியிட்டவர். சித்திரம் வரைதலில் ஆர்வமுள்ளவர். சித்திரங்களைக் காண்பதில் உற்சாகம் கொண்ட மனத்தினர். (129) சில்ப கலையிலும் சித்திரக்கலையிலும் தேர்ந்தவரின் பாதுகாப்பில் ஈடுபட்டவர். சில்பகலை சித்திரகலை இவற்றைப் போதிக்கிற கல்வி நிறுவனங்களை அமைத்தவர். (130)*

**शिल्पि प्रचोदकः शिल्पैः कृतालयपरिष्कृतिः ।**
**स्वनामविख्यातविश्वविद्यालयसमीक्षकः ।। १३१**
**विश्वराष्ट्रीयसद्ग्रन्थालयलब्धात्मतोषणः ।**
**विद्यालयव्रातकृतितुष्टो विद्याविवर्धनः ।। १३२**
**भेरीपटहवाद्यादिमहितस्वागतोत्सवः ।**
**सकृत्स्मरणसन्तुष्टः सर्वज्ञो ज्ञानदायकः ।। १३३**
**दरस्मितमुखाम्भोजः कान्त्या विजितभास्करः ।**
**स्वानुष्ठित्याख्यातकर्मयोगो नेता स्वकर्मवित् ।। १३४**
**स्वभक्तियोगघटितचन्द्रमौलिपदद्वयः ।**
**सप्तकोटिमहामन्त्रवेत्ता जप्तमहामनुः ।। १३५**

*சில்பியை உற்சாகப்படுத்துபவர். சில்பங்களைக் கொண்டு கோயில்களுக்கு அழகூட்டுபவர். தன்பெயரால் புகழ் பெற்ற பல்கலைக் கழகத்தின் மேலாளர். (131) பன்னாட்டு நன்னூல் நிலய அமைப்பால் மனநிறைவு பெற்றவர். வித்யாலயங்கள் பலவற்றை அமைத்ததால் மகிழ்ந்தவர். கல்விமுறையை வளர்த்தவர். (132) பேரீ, படஹம் முதலிய வாத்ய ஒலியுடன் பெருமைமிக்க வரவேற்புவிழா கொண்டவர். ஒரு தடவை நினைப்பதாலேயே மகிழ்பவர். எல்லாமறிந்தவர். அந்தப் பேரறிவை அருள்பவர். (133) புன் சிரிப்பால் மலர்ந்த முகத்தாமரை கொண்டவர். ஒளியால் கதிரவனை வென்றவர். தான் தொடர்ந்து பின்பற்றுகிற நடைமுறையாலேயே கர்மயோக நிலையை விளக்குபவர். முன் நின்று அழைத்தச் செல்பவர். தன் செயல்முறை உணர்ந்தவர் (134) தனது பக்தியோகத்தால் சந்திரமௌளீசுவரரின் இரு திருவடிகளுடன் இணைந்தவர். ஏழுகோடி மஹாமந்திரங்களை அறிந்தவர். மஹாமந்திர ஜபம் புரிபவர். (135)*

मैत्र्यादिवासनावाप्तसमधीर्लोकशर्मदः ।
वैखरीजितवागीश आशावर्गजिदग्रणीः ।। १३६

प्राच्याग्रहाररचनारसिकः स्थितरक्षकः ।
ग्रामीणजनसद्वृत्तिविधाता विहितार्थदृक् ।। १३७

शैवः शाक्तो गाणपतो वैष्णवोऽभेददर्शकः ।
ब्रह्मचर्यात्प्रव्रजित एषणात्रयवर्जितः ।। १३८

भगवत्पादस्मृत्युत्थरोमाञ्चोऽरतिवर्जितः ।
भक्त्यावनम्रविजयजयेन्द्रेड्यो यमीश्वरः ।। १३९

प्रपञ्चव्यवहाराणां साक्षी सङ्गविवर्जितः ।
द्वन्द्वातीतः सुहृदयो राजयोगस्थिरान्तरः ।। १४०

*யோக வழியில் சிறந்த மைத்ரீ. கருணா, முதிதா, உபேக்ஷா என்ற உள்ளத்து மேம்பாட்டிற்கான உள்ளத்து வாஸனைகளுடன் பழகி ஸமநோக்கு பெற்றவர். உலகின் நலத்தை வழங்குபவர். பேச்சால் பிருஹஸ்பதியை வென்றவர். ஆசையின் வெளிப்பாடுகளை வென்றவர்களின் முன் நிற்பவர். (136) பழங்காலத்து அக்ரஹார அமைப்பை வியந்து ரஸிப்பவர். வழக்கில் இருப்பதைக் காப்பாற்றுபவர். கிராம மக்களின் நல்வாழ்விற்கான தொழிலை அமைத்துத் தருபவர். அவரவருக்கு உரிமையான பொருளைக் காண்பவர். (137) சைவர். சாக்தர். காணபதர். வைஷ்ணவர். இவ்வழிகளில் வேற்றுமையின்மையைக் காணச் செய்பவர். பிரும்மசரியத்திலிருந்து துறவு பூண்டவர். பொருளாசை, மறுமையின்பத்தில் ஆசை, மக்கட்பேறு ஆசை என்ற மூன்றுமற்றவர். (138) ஸ்ரீசங்கர பகவத்பாதரின் நினைவால் புல்லரிப்பு கொண்டவர். மனத்திற்குப்பிடிக்காத நிலையற்றவர். பக்தியால் வணங்கி நிற்கிற ஸ்ரீ ஜயேந்திரராலும் விஜயேந்திரராலும் துதிக்கப் பெற்றவர். யமம் எனும் தன்னடக்க நிலைபெற்றவரின் தலைவர். (139) உலக நடவடிக்கைகளை ஒட்டுதலில்லாமல் காண்கிற ஸாக்ஷி. ஒட்டுதலை நீக்கியவர். இன்பதுன்பங்கள் முதலான இரட்டைகளைக் கடந்தவர். நல்லிதயம் படைத்தவர். ராஜயோகத்தில் உள்ளத்தை நிலைக்கச் செய்தவர். (140)*

अवस्थात्रितयातीतभानवान् सूरितल्लजः ।
वीक्षाविवशिताशेषजनस्वान्तः स्वराड् गुहः ॥ १४१
शिवो गुरुः शिवगुरुः शिवगुर्वात्मजाश्रितः ।
श्रीकामकोटिपीठाग्र्यनिकेतो गुरुतल्लजः (६००) ॥ १४२
स्ववृत्तप्रीणिताशेषविबुधो विबुधोत्तमः ।
महावाक्यसमाम्नाततत्त्वज्ञस्तत्वबोधकः ॥ १४३
भक्तोपहृतसद्ग्रन्थकृतेक्षस्तत्स्थसारवित् ।
ज्ञानदानोत्कमधुरवाग्विलासो महामहाः ॥ १४४
मर्यादोल्लङ्घनरतजनदूरोऽविदूरगः ।
बालकोत्साहदो बालसुलभो बालदेशिकः ॥ १४५

*விழிப்பு கனவு தூக்கம் என்ற மூன்று நிலைகளைக் கடந்த துரீய நிலைக்கான பேருணர்வு கொண்டவர். சாஸ்திரமறிந்தவரில் சிறந்தவர். பார்வையால் மக்களனைவரின் உள்ளத்தையும் வசமிழக்கச் செய்பவர். உலகின் உள்ளத்தை ஆள்பவர். மறைபொருள். (141) சிவபெருமான், குரு, சிவனைக்குருவாகக் கொண்டவர். சிவகுருவின் புதல்வரான ஆசார்யாளை அண்டியவர். ஸ்ரீ காமகோடி எனும் சிறந்த பிடத்தை இருப்பிடமாகக் கொண்டவர். குருக்களில் பெருமை மிக்கவர். (600) (142) தன் நடை முறையால் பேரறிஞர்களைத் திருப்திப்படுத்தியவர். பேரறிஞர்களில் மிகமிகச் சிறந்தவர். மஹாவாக்யங்களில் கூறப்பட்ட உட்பொருளை உணர்ந்தவர். அந்த உட்பொருளைப் போதிப்பவர். (143) பக்தர் கொணர்ந்த நன்னூல்களைப் பார்வையிடுபவர். அவற்றுள் பொதிந்த ஸாரத்தை உணர்ந்தவர். பேரறிவு வழங்குவதில் முன்வருகிற இனிய சொல்விரிவுள்ளவர். பேரொளியாளர். (144) தம்தம் எல்லை மீறிச் செயல் புரிகின்ற மக்களுக்கு எட்டாதவர். அருகாமையிலுள்ளவர். சின்னஞ்சிறுவருக்கு உற்சாகம் தருபவர். சிறுவர்களுக்கு எளிதில் கிட்டுபவர். சிறுவர்களுக்கு வழிகாட்டி (145)*

व्यक्तोऽव्यक्तोऽतिविशदश्चिन्मयश्चित्कलाधरः ।
आकांक्ष्यदर्शनो नव्यनव्यरूपधृगीश्वरः ।। १४६

मूकवाचालकृत्पङ्गुसुकराद्रीशलङ्घनः ।
सच्छिष्यरक्षितः शिष्यरक्षाकृत् शिष्यवत्सलः ।। १४७

पदवाक्यप्रमाणज्ञः प्रस्थानत्रयपण्डितः ।
भक्तानां परमस्पष्टः परमाख्यगुरुप्रियः ।। १४८

परर्द्ध्यस्पृह आर्तेष्टदाता धर्मपरायणः ।
पर्जन्यवद्धितकरः परिग्रहविवर्जितः ।। १४९

पवनः पावनः पूतस्वाचारे पर्यवस्थितः ।
स्मरणादाधिशतहृत् भवरुग्भेषजं भिषक् ।। १५०

*வெளிப்பட்டவர், வெளிப்படாதவர். மிகத் தெளிந்தவர், பேரறிவுவடிவானவர், பேரறிவின் பகுதியை வெளிப்படையாகத் தாங்குபவர். மிகவும் ஆர்வத்துடன் காணத்தக்கவர். புதுப்புது வடிவமேற்பவர். ஆண்டவன், (146) ஊமையை வாயாடியாக்குபவர், முடவனைப் பெருமலைத் தாண்டச்செய்பவர், நல்ல சிஷ்யர்களால் காப்பாற்றப்பட்டவர், சிஷ்யர்களைக் காப்பவர். சிஷ்யர்களிடம் தாயன்பு கொண்டவர். (147) பதம் (வியாகரணம்) வாக்யம் (நியாயம்) பிரமாணம் (மீமாம்ஸை) என்ற மூன்று சாஸ்திரங்களையறிந்தவர். பிரும்மஸூத்திரம், உபநிஷத், கீதை முதலிய ஸ்மிருதிகள் என்ற மூன்று சாஸ்திரப்படிகளில் வல்லுனர். பக்தர் நோக்கில் அப்பட்டமாகத் தெரிபவர். பரமகுரு சந்திரசேகரரின் பிரியத்திற்கு ஆளானவர். (148) பிறரது செழிப்பை நாடாதவர். நலிந்தவர் விரும்பியதைத் தருபவர். தர்மத்தை ஒட்டிச் செல்வதைப் பெரிதாகக் கருதுபவர். மேகம்போல் இதமளிப்பவர். தனக்கென எதனையும் கொள்ளாதவர். (149) தூயவர், தூயதாக்குபவர். புனிதமான தன்ஒழுக்கத்தில் நிலை நிற்பவர், நினைத்ததும் பல மனநோய்களை அகற்றுபவர். பிறப்பிறப்பெனும் ஸம்ஸார நோய்க்கு மருந்து, மருத்துவர். (150)*

पुण्यकीर्तिः पुण्यलभ्यदर्शनः स्मृतिपावनः ।
पुष्कराक्षः पुष्पहासः पुरुजित्पुरुसत्तमः ।। १५१
भूतभव्यभवद्द्रष्टा भव्यो रुद्राक्षभूषणः ।
प्रग्रहः पेशलः प्रांशुः शिष्यदोषप्रतर्दनः ।। १५२
ब्रह्म ब्रह्मविदामग्र्यः प्रसन्नो ब्रह्मभावदः ।
भ्राजिष्णुः प्राणदः प्राणनिलयो मङ्गलं परम् ।। १५३
मनोजवो मारुतजित्श्वासायामो महाक्रमः ।
महोनिधिर्महाभागो महाबुद्धिर्महार्हणः ।। १५४
मृदुस्वनो महावाग्मी परा मुक्त्यर्थिनां गतिः ।
सुमेधया दृष्टलोकवार्ताकोऽदृश्यदर्शनः ।। १५५

*புண்யம் தரும் புகழ் பெற்றவர். (தன் புகழைப் பாடுபவருக்குப் புண்யம் விளைவிப்பவர்) முன் செய்த புண்ணியத்தால் காணத்தக்கவர். நினைப்பதால் தூய்மை உண்டாக்குபவர். தாமரைக்கண்ணர், பூபோன்று சிரிப்பவர். பலரைப் பலவகையில் வெல்பவர். பலரிடையே மிகச்சிறந்தவராகக் காணப் பெறுபவர். (151) நிகழ்ந்தது, நிகழவிருப்பது, நிகழ்வது, இவற்றை மனக்கண்ணால் காண்பவர். பணிவால் அழகியவர். ருத்ராக்ஷமணிந்தவர். அன்பர் அளிப்பதை ஏற்பவர். மென்மைமிக்கவர். நெடிது உயர்ந்தவர். சிஷ்யரிடமுள்ள குறைகளை அகற்றுபவர். (152) பரம்பொருள். பரம்பொருளை உணர்ந்தவரில் சிறந்தவர். தெளிந்தவர். பரம்பொருள் நிலையுணர்வு வழங்குபவர். எப்போதும் ஒளிப்பிழம்பாய் துலங்குபவர். உயிரூட்டுபவர். உயிரின் மறைவிடம், பெரும் மங்களம், (153) மனத்தின் வேகமுள்ளவர். பிராணவாயுவைக் கட்டுப்படுத்தி நீண்ட மூச்சுவிடுபவர். பெருநடை கொண்டவர். ஒளியின் வைப்பிடம், விரிந்த உலகையே தன்பாகமாகத் தனதாகக் கொண்டவர். பேரறிவு படைத்தவர். பெரிதும் மதிக்கப் பெறுபவர். (154) மென் குரலாளர், பெரும் பேச்சாளர், முக்தியை நாடுபவர் சென்றடைகிற பேரிடம். நல்ல மேதையால் உலக நடைமுறைச் செய்தி கண்டவர். காண இயலாததைக் கண்டவர். (155)*

